Regd. No. TN/MS (C) 244 ANNA Leading Progressive Tamil Daily of the People (MADRAS) Phone: 420212 4 பக்கம் விலை50 காசு
POST WITHOUT PRE-PAYMENT LICENCE NO G6-TN-MS (C) P.P. 55



பலம்

எல்லாவுநியாயமான லட்சியமும் பலத்துடன் கூடியிருந்தாலொழிய வெற்றி பெறமுடியாது.

-பேரறிஞர் அண்ணா

# அண்ணா

நிறுவனர்: எம்.ஜி.ஆர்



என் ஆசை

ஏழைகளுக்கு சேவை செய்யவேண்டும் என்பதே என் அந்தியந்த ஆசை.

-தந்தை பெரியார்

மலர்: 8 சென்னை 6 - 4 - 1984 வெள்ளி வெளியீடு 7 - 4 - 1984 சனி இதழ்: 171

# விண்வெளி நிலையத்தில் ராகேஷ்சர்மா ஆய்வுப் பணிகள்

## இந்திய மக்களின் வாழ்த்தைப் பிரதமர் இந்திரா தெரிவித்தார்

**புதுடெல்லி, ஏப். 6- விண்வெளியில் பறந்துகொண்டிருக்கும் இந்திய வீரர் ராகேஷ் சர்மாவுடன்பிரதமர் இந்திரா நேற்றிரவு செயற்கைக்கோள் மூலம் தொடர்பு கொண்டு பேசினார். ராகேஷ்சர்மா விண்வெளி நிலையத்தில் இன்று பல ஆய்வுகளை நடத்தினார்.**

இந்தியாவைச் சேர்ந்த ராகேஷ்சர்மா மற்றும் ரஷியாவைச் சேர்ந்த மாலேசோவ், ஸ்டிரிகலோவ் ஆகியோர் சென்ற சோயுஸ்-11 ராக்கெட் நேற்று முன்தினம் இரவு 2 ஆண்டுகளுக்கு முன் ரஷியா பறக்க விட்ட சல்யூட் - 7 என்ற விண்வெளி நிலையத்துடன் இணைந்தது. இரவு 11.05 மணிக்கு ராக்கெட்டின் கதவை திறந்து கொண்டு சல்யூட் விண்வெளி நிலையத்திற்குள் ராகேஷ் சர்மாவும் மற்ற இரு ரஷிய விண்வெளி வீரர்களும் நுழைந்தனர். அவர்களை அங்கிருந்த ரஷிய வீரர்கள் வரவேற்றனர். பின் 6 பேரும ஒன்றாக உணவருந்தினர்.

பூமியிலிருந்து ஏறத்தாழ 150 மைல் உயரத்திலும் மணிக்கு 18ஆயிரம் மைல் வேகத்திலும் பறந்து கொண்டிருக்கும் இந்த ராக்கெட் நேற்றிரவு 8.05 மணிக்கு இந்தியா மீது பறந்தபோது இந்திய விண்வெளி வீரர் ராகேஷ் சர்மாவுடன் பிரதமர் இந்திரா தகவல் தொடர்பு செயற்கைகோள் மூலம் பேசினார்.

டெல்லியிலுள்ள விமானப்படை நிலையத்திலிருந்து விண்வெளியில பறக்கும் இந்திய வீரர் ராகேஷ் சர்மாவுடன் பிரதமர் இந்திரா 10 நிமிடம் பேசியதை இந்தியா முழுவதும் உள்ள டெலிவிஷன் நிலையங்கள் ஒளிபரப்பின.

சென்னையில் உள்ள டெலிவிஷனிலும் இக்காட்சி தெளிவாகத் தெரிந்தது.

### பாராட்டு

வானவெளிவீரர்களைப் பாராட்டி பிரதமர் இந்திரா கூறியதாவது:-

வரலாற்றுச் சிறப்பு வாய்ந்த சாதனையைச் செய்திருக்கிறீர்கள். உங்கள் அனைவருக்கும் என்னுடைய பாராட்டுதலையும் வாழ்த்துக்களையும் தெரிவித்துக் கொள்கிறேன். விண்வெளி பயணத்தை வெற்றிகரமாக முடித்துக்கொண்டு நீங்கள் பத்திரமாக பூமிக்கு திரும்பி வந்துசேரும் நாளை ஆவலோடு எதிர்பார்க்கிறோம்.

விண்வெளி பயணத்தின் மூலம்கிடைக்கும்பயனுள்ள தகவல்களை ஆக்க பூர்வமான, மனித குலத்துக்கு பயன் படக் கூடிய பணிகளுக்கே பயன்படுத்துவோம்.

இவ்வாறு பிரதமர் இந்திரா கூறிவிட்டு ராகேஷ் சர்மாவுடன் உரையாடினார்.

உரையாடல் விவரம் வருமாறு:-

பிரதமர்:- நீங்கள் விண்வெளியில் இருந்து பார்க்கும் போது இந்தியா எப்படி தெரிகிறது?

ராகேஷ்சர்மா:- உலகத்திலேயே இந்தியா தான் மிக அழகாக காட்சி அளிக்கிறது.

பிரதமர்:- நீங்கள் விண்வெளி கப்பலுக்குள் இருக்கும் போது எப்படி இருக்கிறது? எத்தகைய உணர்ச்சியை அடைகிறீர்கள்?

ராகேஷ்:- நான் பூமியில் பயிற்சி பெறும்போது எப்படி இருந்ததோ அதே மாதிரிதான் இருக்கிறது. வித்தியாசம் தெரியவில்லை.

பிரதமர்:- உங்கள் உடல்நிலை எப்படி இருக்கிறது? என்ன உணவு சாப்பிடுகிறீர்கள்?

ராகேஷ்சர்மா:- பூரண ஆரோக்கியத்துடன் இருக்கிறோம். நன்றாக சாப்பிடமுடிகிறது. இங்கு விண்வெளி கப்பலில் உள்ள ரஷிய வீரர்கள் சுடச்சுட உணவு தயாரித்துபரிமாறினார்கள்.

பிரதமர்:- இப்போது டெலிவிஷன்மூலம் இந்திய மக்கள் அனைவரும் உங்களைப் பார்த்துக் கொண்டு இருக்கிறார்கள். உங்கள் விண்வெளிப் பயணம் வெற்றிகரமாக முடிந்து பத்திரமாகத் திரும்ப நாங்கள் எல்லோரும் உங்களை வாழ்த்துகிறோம். உங்களையும மற்ற விண்வெளி வீரர்களையும் நேருக்கு நேர் காண மக்கள் அனைவரும் ஆவலோடு உள்ளனர். இந்திய — ரஷிய நட்புறவுக்கு இந்த விண்வெளிப்பயணம் ஓர் எடுத்துக்காட்டு. எதிர்கால இளைஞர்கள் பல வீரதீரச் செயலகளில் ஈடுபட உங்கள் பயணம் வழிகாட்டியாக அமையும்.

ராகேஷ்சர்மா:- தங்கள் வாழ்த்துக்களுக்கு எங்கள் எல்லோருடைய சார்பிலும் நன்றி தெரிவிக்கிறேன்.

இவ்வாறு உரையாடல் நடந்தது.

### ராகேஷ் யோகாசனம்

இதுபோல் ரஷிய அதிபர் செர்னங்கோவுடன் ரஷிய வானவெளி வீரர்கள பேசினார்கள். ரஷிய டெலிவிஷன்களில் அந்த நிகழ்ச்சி ஒளிபரப்பு ஆகியது.

ராககெட்டில் பறக்கும் போது பூமியில் வீட்டில் இருப்பது போலவே அன்றாட பணிகளை விண்வெளியில் செய்தனர். ராகேஷ்சர்மா சில யோகாசனங்களையும் செய்தார்.

ராகேஷ்சர்மாவும் மற்ற இரு ரஷிய வீரர்களும் சென்ற சோயுஸ் 11 தொடர்ந்து விண்வெளி கப்பலுடன் சுற்றிக் கொண்டிருக்கும், இவர்கள் திரும்பும்போது சோயுஸ் 10 என்ற ராக்கெட்டில் திரும்புவார்கள் முன்பு சென்ற மற்ற மூன்று வீரர்களும் சோயுஸ் 11ல் பூமிக்கு திரும்புவர்.



விண்வெளி ஆய்வு நிலையமான சல்யூட்டில் ராகேஷ்சர்மாவும மற்ற ரஷ்ய விண்வெளி வீரர்களும் இன்று பல்வேறு ஆய்வு பணிகளை மேற்கொண்டனர்.

---

### சுவர் இடிந்து விழுந்து

## கழக தோழரின் குழந்தை சாவு

சென்னை, ஏப். 6— ஓலைக்குடிசை சுவர் இடிந்து விழுந்ததால் கழக தோழர்ஒருவரது குழந்தை இறந்துள்ளது.

முகப்பேறு சென்னை 12-வது வட்டம் அவைத்தலைவர் துரைசிங்கத்தின் குழந்தை மனோன்மணி வயது 2

இந்தக் குழந்தைவிருகம் பாக்கத்தில் உள்ள ஆயா வீடு சென்று இருந்தது. அங்கே ஓலைக் குடிசை சுவர் இடிந்து குழந்தை மீது விழுந்ததால் படுகாயமுற்று அரசு மருத்துவ மனையில் அனுமதிக்கப்பட்டு பிறகு இறந்து விட்டது.

---

## பஞ்சாபில் கல்லூரிக்கு தீ வைப்பு

சண்டிகர், ஏப் 6- வன்முறைச் செயலில் இறங்கியுள்ள சீக்கியதீவிரவாதிகள், படிண்டாவில் உள்ள கல்லூரி ஒன்றுக்கு நேற்று மாலை தீவைத்தனர் அதில் கல்லூரி தஸ்தாவேஜுகள் முழுவதும் எரிந்து நாசமாகி விட்டதாக கூறப்படுகிறது.

அமிர்தசரஸ் நகரில் பிறப்பிக்கப்பட்டுள்ள ஊரடங்கு உத்தரவு வருகிற ஞாயிற்றுக்கிழமை வரை நீட்டிக்கப்பட்டுள்ளது. கடந்த 40 மணி நேரத்தில் பெரிய அசம்பாவிதங்கள் ஏதும் பஞ்சாபில் நடைபெறவில்லை.

மாநிலத்தில் சட்ட ஒழுங்கு நிலையை அரசு கண்காணித்து வருகிறது. சட்ட ஒழுங்கை மீறுபவர்களை இரும்புக்கரம் கொண்டு அடக்குவோம் என்று கவர்னரின் சட்டஒழுங்கு ஆலோசகர் சுரேந்திரநாத் கூறினார்.

---

### கொள்ளைகளைத்தடுக்க நடவடிக்கை:

# சென்னை புறநகர் பகுதிகளில் ஆயுத போலீசார் ரோந்து

## ஒய்வு பெற்ற ராணுவத்தினரையும் காவல் பணியில் ஈடுபடுத்த ஆலோசனை

**சென்னை, ஏப் 6 சென்னை நகரைச் சுற்றியுள்ளபுறநகர்ப் பகுதிகளில் இரவு நேரத்தில் ஆயுதம் தாங்கிய போலீசார் 200 பேர் ரோந்து சுற்றி வருவார்கள் என்று தலைமை செயலாளர் சொக்கலிங்கம் தெரிவித்தார்,**

தமிழக அரசு தலைமைச் செயலாளர் சொக்கலிங்கம் சென்னைகோட்டையில் நிருபர்களிடம் கூறியதாவது:

சென்னையைச் சுற்றி செங்கற்பட்டு மாவட்டத்தின் கிழக்கு மேற்கு பகுதிகளைச் சேர்ந்த சுமார் 350க்கும் மேற்பட்ட குடியிருப்புப் பகுதிகள் இருக்கின்றன. ஆங்காங்கே உள்ள போலீஸ் நிலையத்தில் இருக்கும் காவலர்கள் இப்படி தனித்தனியாக உள்ள குடியிருப்புப் பகுதிகளில் இரவு நேர ரோந்துப் பணிகளில் சரிவர ஈடுபட முடியவில்லை.

ஆகவே இது குறித்து விவாதிக்க சில தினங்களுக்கு முன்பு உயர் மட்ட போலீஸ் அதிகாரிகள் மற்றும் அரசு அதிகாரிகள் கூட்டம் நடைபெற்றது.

இக்கூட்டத்தில் எடுக்கப்பட்ட முடிவுப்படிவெளி மாவட்டங்களில் இருந்து ஆயுதம் தாங்கிய போலீசார் 200 பேர் இப்பகுதிகளில் இரவுநேர ரோந்துப் பணிகளுக்கு பயன்படுத்தப்பட உள்ளனர்.

### வாகனங்களில் ரோந்து

இந்த ஆயுதம் தாங்கிய போலீசார் வாகனங்களில் இந்தக் குடியிருப்புப் பகுதிகளில் ரோந்து வந்து பாதுகாப்புப் பணியில் ஈடுபடுவார்கள்.

ஓய்வுபெற்ற ராணுவத்தினரை இப்பகுதிகளில் ரோந்து பணிக்கு பயன்படுத்துவது பற்றியும் அரசு ஆலோசித்து வருகிறது.

சென்னை நகரில் ஏற்கனவே ஓய்வு பெற்ற ராணுவத்தினர் 300 பேர் ரோந்துப் பணிகளில் ஈடுபடுத்தப்பட்டுள்ளனர்.

இவ்வாறு தலைமைச் செயலாளர் சொக்கலிங்கம் கூறினார்.

---

## விமானம் கடத்திய ஆசாமி கைது

அங்காரா, (துருக்கி) ஏப். 6— சவூதி அரேபியாவைச் சேர்ந்த விமானம் ஒன்று 277 பயணிகளுடன் நடுவானில் கடத்தப்பட்டது. கடத்தல்காரன் பின்னர் பிடிபட்டான்.

சவூதி அரேபியாவைச் சேர்ந்த ட்ரைஸ்டார் ஏர் லைனர் என்ற விமானக் கம்பெனிக்கு சொந்தமான ஒருவிமானம் ஜெட்டா நகரிலிருந்து277 பயணிகளை ஏற்றிக் கொண்டு டமாஸ்கஸ்நகருக்கு சென்று கொண்டிருந்தது.

நடு வானில் விமானம் சென்று கொண்டிருந்த போது திடீரென்று ஒருவன் எழுந்து விமானியை மிரட்டி ஸ்டாக்ஹோம் நகருக்கு செலுத்துமாறு பணித்தான்.

வழியில் பெட்ரோல் போடுவதற்காக துருக்கி நாட்டில் இஸ்தான்பூர் நகரில் விமானத்தை இறக்கினான். அங்கு தயார் நிலையில் இருந்தபாதுகாப்புப்படையினர் அதிரடி தாக்குதல் நடத்தி விமானத்தைக் கடத்தியவனைப் பிடித்தனர்.

பிடிபட்டவன் பெயர் ஹிதிர் அகமதுமகவேஷ் சிரியா நாட்டை சேர்ந்தவன். ஒரு கத்தி மட்டும் வைத்திருந்தான். எந்தக் காரணத்திற்காக விமானத்தை கடத்தினான் என்பது தெரியவில்லை. அவனுக்கு உதவியாக இருந்த விமானப் பயணி ஒருவரும் கைது செய்யப்பட்டார்.

---

### புரட்சித்தலைவர் அரசின் மற்றோர் சாதனை:

### சுயவேலைவாய்ப்பு திட்டத்தின் கீழ் 8 மாதங்களில்

# 4லட்சம்பேர்களுக்கு ரூ.163கோடி உதவி

## தலைமைசெயலாளர் சொக்கலிங்கம்பேட்டி

**சென்னை, ஏப் 6· சுயவேலை வாய்ப்பு திட்டம் மற்றும் வேலை வாய்ப்பு திட்டத்தின் கீழ் கடந்த 8 மாதங்களில் 4 லட்சத்திற்கும் மேற்பட்டவர்களுக்கு ரூ 163 கோடி கடன் உதவி அளிக்கப்பட்டுள்ளது என்று அரசு தலைமைசெயலாளர் சொக்கலிங்கம் கூறினார்**

கடந்த ஆண்டு தமிழக அரசு சுயவேலை வாய்ப்பு பயிற்சி மற்றும் வேலை வாய்ப்பு நலிந்த பிரிவினருக்கு சுய தொழில் செய்ய உதவி, ஆகியவற்றிற்காக கடனுதவியை அளித்துவந்தது. படித்த வேலைவாய்ப்பு அற்றவர்களுக்கு சுய தொழில் தொடங்குவதற்காக மத்திய அரசு 30 கோடி ரூபாயை குறியீடாக நிர்ணயித்தது.

17 ஆயிரத்து 500 பேர்களுக்குஇந்த உதவிவழங்கப்படவேண்டும் என்றும் அறிவித்திருந்தது. ஆனால் தமிழக அரசு 20 ஆயிரத்து 189பேர்களுக்கு 31 கோடியே 35 லட்சம் ரூபாய் கொடுத்தது.

இந்தக்கடன்கள் 7 ஆண்டுகாலத்தில் திருப்பித்தர படவேண்டியதாகவும் பயிற்சி மற்றும் சுயவேலை திட்டத்தின் கீழ் 18 ஆயிரத்து 492 பேர் பயிற்சி பெற்றிருக்கிறார்கள்.

அவர்களில் எத்தனை பேருக்கு தொழில்தொடங்க கடனுதவி தேவை என்று கேட்டதற்கு 10ஆயிரத்து 334 பேர் பதில் அளித்தார்கள்.

அதில் 6 ஆயிரத்து 983 பேர்களின் விண்ணப்பங்கள் தேர்ந்தெடுக்கப்பட்டு வங்கிகளுக்கு அனுப்பப்பட்டது.

அவர்களில் 3 ஆயிரத்து 303 பேர்களுக்கு 1 கோடியே 61 லட்சம் ரூபாய் வழங்கப்பட்டுள்ளது. மற்றவர்களுக்கும் தொடர்ந்து உதவி வழங்கப்படவுள்ளது.

### வேலை வாய்ப்பு

நலிந்த பிரிவினருக்கு வேலைவாய்ப்பு அளிக்கும் திட்டத்தின் கீழ் அக்டோபர் மாதம் முதல் டிசம்பர்வரை 1லட்சத்து 70ஆயிரத்து 564 பேருக்கு ரூ 30 கோடியே 10 லட்சம வழங்கப்பட்டுள்ளது.

இதில் ஆதிதிராவிடர் பழங்குடியினர் 56 ஆயிரத்து 966 பேர்கள் ஆகும். அவர்களுக்கு ரூபாய் 7 கோடியே 66 லட்சம் வழங்கப்பட்டுள்ளது.

இந்த ஆண்டு ஜனவரி பிப்ரவரி, மார்ச் ஆகிய 3 மாதங்களில் மட்டும் 1லட்சத்து 76 ஆயிரம் பேருக்கு 41 கோடி ரூபாய் வழங்கப்பட்டுள்ளது.

கிராமப் புறங்களில் சாலை மேம்பாடு செய்தல் சிறிய நீர்ப்பாசன திட்டங்களை மேம்பாடு செய்தல் நிலத்தடி நீரை பலப்படுத்துவதற்கான புதிய கசிவு நீர்க் குட்டைகள் அமைப்பதற்காக ரூ. 60 கோடி அளிக்கப்பட்டுள்ளது. இந்தப் பணிகளில் ஆங்காங்கே உள்ள சாதாரண தொழிலாளிகளுக்கு வேலைவாய்ப்பு அளிக்கப்படுகிறது. இதில் ஈடுபடும் ஆண் பெண் தொழிலாளர்களுக்கு தலா தினசரி ரூ. 7 சம்பளம் வழங்கப்படுகிறது.

இவ்வாறு தலைமைச் செயலாளர் சொக்கலிங்கம் தெரிவித்தார்.

---

## பஸ் விபத்தில் கை இழந்தவர் உயிரிழந்தார்

சென்னை, ஏப். 6— நேற்று அண்ணாசாலை பஸ்விபத்தில் கைதுண்டிக்கப்பட்டவர் இன்றுஉயிர் இழந்தார்.

இவரது பெயர் ராமன் வயது 30 இவர் ஒரு ஆங்கில நாளிதழ் காண்டீனில் வேலை பார்த்து வந்தார். நேற்றுகாலை நடந்த விபத்தில் இவரது கை துண்டிக்கப்பட்டது. அரசு பொது மருத்துவமனையில் அனுமதிக்கப்பட்டு இருந்த ராமன் இன்று மரணம் அடைந்தார்.

இந்த விபத்து சம்பந்தமாக டூரிஸ்ட் பஸ் டிரைவர் அர்ச்சுனன் கைது செய்யப்பட்டுள்ளார்.

உயிரிழந்த ராமனுக்கு திருமணமாகி 18 மாதம் ஆகிறது. 6 மாத குழந்தை உள்ளது.

---

### பரங்கிமலை அருகே

## லாரியுடன் மோதிய ஜீப் தீப்பற்றிஎரிந்தது

சென்னை, ஏப். 6- லாரியும், ஜீப்பும் மோதியதால் ஏற்பட்ட விபத்தில் அந்த ஜீப் தீப்பற்றி எரிந்தது.

இன்று காலை சென்னையை அடுத்த பரங்கிமலையில் உள்ள ராணுவ மருத்துவமனை எதிரே இந்த விபத்து நடந்தது.

லாரியுடன் மோதிய ஜீப் பின்னர் சாலை ஓரம் இருந்த விளக்குக் கம்பத்திலும் மோதியது. அப்போது ஜீப்தீப்பிடித்து எரிந்தது.

தகவல் அறிந்தவுடன் தீயணைக்கும் படையினர் விபத்து நடந்தஇடத்துக்கு விரைந்து சென்றனர்.

இந்த விபத்தில் ஆள் சேதம் ஏதேனும் உண்டா என்பது தெரியவில்லை.

கீரப்பாளையத்தில்

## கழக பொதுக் கூட்டம்

கீரப்பாளையம், ஏப். 6- கீரப்பாளையம் ஒன்றியம் அனைத்திந்திய அண்ணா தி. மு. கழகப் பொதுக் கூட்டம் ஏப். 8-ம் தேதி மாலை 6 மணிக்கு சாக்காங்குடியில் நடைபெறுகிறது.

பி. கருப்பன் தலைமையிலும் கே. நீலமேகம், என.குப்புசாமி, எஸ். கந்தவேல், என். பூவராக மூர்த்தி ஆகியோர் முன்னிலையிலும் எம். கனகவேல், கே. சக்கரவர்த்தி, கே. பத்மநாபன் எம். குப்புசாமி வரவேற்புரையாற்றுகிறார்கள். கோ. வி. இளங்கோவன், வைத்தி பாலகிருஷ்ணன் கொடியேற்றுகிறார்கள். இராம. ஆதிமூலம், எஸ். கே. விஜயன், தில்லை சீத்தாபதி, கே. முருகுமணி, பா. உமாபதி வி இராதாகிருட்டிணன், கே.ஆர். கணபதி எம்எல்ஏ கே. பி. பன்னீர்செல்வம் மற்றும் பலர் பேசுவர். கே. செயபால் நன்றி கூறுவார். ஆர்.பி.வேலன்-பிரபாவின் கலை நிகழ்ச்சியும் நடைபெறும்.

## ஏல விளம்பரம்

(1) M. சம்பாலால், 34, வில்லேஜ் ரோடு, நுங்கம்பாக்கம், சென்னை—34. (31-12-79க்கு முன்பும், 24-8-82 முதல் ஜனவரி 83 முடிய) ஏலத் தேதி 17-4-84 அன்று காலை 11 மணிக்கும், (2) J. ரத்தன் லால், 48, வன்னியா தெரு, சென்னை-94 (31-12-79க்கு முன்பும், 24-8-82 முதல் ஜனவரி 83 முடிய) ஏலத் தேதி 18-4-84 அன்று மாலை 1 மணிக்கும், மேற்படியார் கடைகளில் அடகு வைத்துள்ள பொன், பொன் அல்லாத பொருட்களை வருவாய்த்துறை அதிகாரிகள் முன்பு அரசு அங்கீகாரம் பெற்ற ஏலதாரர் M. தரம்சந்த்ஜெயின் 150, சச்சிதானந்தம் தெரு, சென்னை 12ல் மாவட்ட ஆட்சியரின் உத்திரவின்படி ஏலம் போடுவார்.

## சிரிப்பு நடிகர் சாரங்கபாணிக்கு ராஜாசாண்டோ பரிசு

சென்னை, ஏப். 6— சினிமாத்துறையில் நீண்டகால அனுபவமுள்ளவர்களுக்கும் அத்துறைக்கு நீண்ட காலம் பாடுபட்டவர்களுக்கும் தமிழக அரசு ஆண்டு தோறும் ராஜாசாண்டோ நினைவுப்பரிசு வழங்கி வருகிறது.

அதன்படி 1981-82ம் ஆண்டிற்கான இப்பரிசு பழம்பெரும் நடிகர் கே. சாரங்கபாணிக்கு வழங்கப்படுகிறது. பரிசுத்தொகையாக 25 ஆயிரம் ரூபாயும் ராஜாசாண்டோ உருவம் பொறித்த கேடயமும் வழங்கப்படும்.

இவருக்கு முன்னதாக எம்.ஏ. வேணு, எல். வி. பிரசாத், பி. ஏ.பெருமாள் ப.நீலகண்டன் ஆகியோர் இப்பரிசைப் பெற்றிருக்கிறார்கள்.

93-வது வட்டத்தில்

## கழக கொடியேற்று விழா

சென்னை, ஏப். 6— சென்னை 93வது வட்டம் சையத் அப்துல்லா தெருவில் இன்று (வெள்ளி) மாலை 6மணிக்கு கழகக் கொடியேற்றுவிழா நடக்கிறது.

டி. ஜோதி தலைமையிலும், ஜி.பழனி வரவேற்பிலும், எல். கோடீஸ்வரன் முன்னிலையிலும் நடக்கும் இந்த விழாவில் இ. மதுசூதனன் கழகக் கொடி ஏற்றுகிறார்.

ராஜ்குமார் இனிப்பு வழங்குகிறார். கதிர் சோமசுந்தரம், மு. அன்புத்தம்பி இரா. குப்புசாமி, கண்ணம்மாள் ஆறுமுகம், டி. முத்து மற்றும் பலர் பேசுகின்றனர்.

36-வது வட்ட

## பொது உறுப்பினர்கள் கூட்டம்

சென்னை, ஏப். 6— சென்னை 36-வது வட்ட கழக பொது உறுப்பினர்கள் கூட்டம் 7-ம் தேதி இரவு 7 மணிக்கு நடைபெறுகிறது.

அயன்புரம் கொன்னூர் நெடுஞ்சாலையில் உள்ள விவேகானந்தா டுடோரியல் காலேஜ் மாடியில் கூட்டம் நடைபெறுகிறது. ஜெப்பியார் எம். எல். சி. இ. மதுசூதனன் ஆகியோர் முன்னிலையில் கூட்டம் நடைபெறுகிறது.

லஞ்சம்வாங்கியதாக

## சப்-இன்ஸ்பெக்டர் கைது

சென்னை, ஏப். 6- லஞ்சம் வாங்கியதாக ஒரு சப்-இன்ஸ்பெக்டரும் தலைமைக் காவலரும் கைது செய்யப்பட்டனர்.

திருவான்மியூர் காவல் நிலையத்தில் குற்றவியல் சப்-இன்ஸ்பெக்டராகபணி புரிபவர் ஜி. பலராமன் அதே காவல் நிலையத்தில் தலைமைக் காவலராக வேலை பார்ப்பவர் டி. சுப்பிரமணியம். இவர்கள் ஒருநபரிடம் அவர் மீது வழக்குப்பதவு செய்யாமல் சலுகை காட்டுவதாகவும் அதற்கு 200 ரூபாய் தர வேண்டும் என்றும் கேட்டார்களாம்.

இதுகுறித்து சென்னை கண்காணிப்பு மற்றும் லஞ்ச ஒழிப்பு போலீசில் புகார்செய்யப்பட்டது. சப் இன்ஸ்பெக்டர் பலராமனும் தலைமை காவலர்சுப்பிரமணியமும் லஞ்சம்கேட்டு பெறும்போது லஞ்ச ஒழிப்பு போலீசாரால் கையும் களவுமாக பிடிபட்டனர்.

## துறைமுக ஸ்டிரைக்கால் பத்திரிகை காகித தட்டுப்பாடு

புதுடெல்லி, ஏப். 6- வெளிநாட்டிலிருந்து கப்பலில் வந்துள்ள பத்திரிகைக் காகிதத்தை இறக்கி விட அனுமதிக்குமாறு துறைமுகத் தொழிலாளர்கள் சம்மேளனத்திற்கு இந்திய மற்றும் கிழக்கத்திய செய்திப் பத்திரிகைகள் சங்கம் கோரிக்கை விடுத்துள்ளது.

சங்கத்தலைவர் என். முரளி விடுத்துள்ள ஓர் அறிக்கையில் கூறிஇருப்பதாவது:-

துறைமுகத் தொழிலாளர்கள் வேலை நிறுத்தம் தொடங்குவதற்கு முன்பே தாமதப்பட்ட இறக்குமதி காரணமாக பத்திரிகைக் காகித பற்றாககுறை அதிகரித்து வந்தது. ஆனால் இப்போது தாப் மாநில வர்த்தகக்கழக கிடங்கிகளில் இருப்பு ஏறக்குறைய காலியாகிவிட்ட நிலைமை காணப்படுகிறது.

பற்றாக்குறை வளர்ந்து வரும் நிலையில பல பத்திரிகைகள் வெளிவருவது நின்றுவிடக்கூடிய அபாயம் ஏற்பட்டுள்ளது.

நாட்டின் பல துறைமுகங்களில் 10ஆயிரம்டன் பத்திரிகைக் காகிதம் முடங்கிக் கிடக்கிறது. இந்த காகிதத்தை இறக்கி விட துறைமுகத் தொழிலாளர் சம்மேளனம் அனுமதிக்க வேண்டும்.

இவ்வாறு அவர் கேட்டுக் கொண்டுள்ளார்.

114-வது வட்ட

## கழகத் தோழர் மறைவு

சென்னை. ஏப். 6— சென்னை 114-வதுவட்ட கழகத்தோழர் வி. ஆர். பரந்தாமன் கடந்த 2-ந் தேதி மறைவு எய்தினார். தகவல் அறிந்ததும் சென்னை மாவட்ட கழக துணைச் செயலாளர் கு. க. செல்வம் தொகுதி செயலாளர் தி.நகர் மூர்த்தி, வட்ட செயலாளர்கள் ஆ சுப்பையாஎஸ். கிருஷ்ணன், ஏ.கோலாஸ் மற்றும் எஸ். அண்ணாமலை, பி. ஏகாம்பரம் ஏ, வி. நீதிமாறன், கே. ஏகாம்பரம், எஸ்.கோபால் ஆகியோர் மறைந்த பரந்தாமனின் உடலுக்கு மாலை வைத்து அஞ்சலி செலுத்தினர்.

## அமைச்சர் காளிமுத்து தலைமையில் நடக்கும் திருமணம்

மதுரை, ஏப், 6. மதுரை பாண்டிக் கவுண்டரின் மகன் பாலகிருஷ்ணனுக்கும் திண்டிவனம் எஸ். துரையின் மகள் தேன்மொழிக்கும் வருகிற 8-ந் தேதி (ஞாயிறு) காலை 10மணிக்குமதுரை மதனகோபால சுவாமி கோயில் திருமண மண்டபத்தில் திருமணம் நடக்கிறது.

இந்த மணவிழாவில் அமைச்சர் காளிமுத்து தலைமையில் நடக்கிறது.

மதுரை எஸ். பாண்டியன், சேடப்பட்டி முத்தையா எம். எல். ஏ. மதுரை மேயர் பட்டுராஜன் துணை மேயர் முனியசாமி என்.லட்சுமி நாராயணன் பி. பாண்டியன், எஸ்.டி. கே ஜக்கையன் எம்.பி. பொ. அன்பழகன், வேராசன் செல்லப்பா, கே. வி. கந்தசாமி எம்.எல்.ஏ. ஏ பாலுச்சாமி எம்.எல்.ஏ டாக்டர் ராதா தியாகராஜன், வெ, பாலகுரு, கே. எஸ். சந்தானம் சோ. நவநீதகிருஷ்ணன், மதுரை இளவரசன். ரத்தினவேல் மற்றும் பலர் வாழ்த்துரை வழங்குகின்றனர்.

வி. என். சிதம்பரம் வரவேற்புரையாற்றுகிறார். கி தங்கம் நன்றி கூறுகிறார்.

## கழககொடி ஏற்று விழா

சென்னை, ஏப், 6 சென்னை, சர்மாநகரில் சைகிள் ரிக்ஷா சங்ககிளை திறப்பு விழாவும், கழககொடி ஏற்று விழாவும் எம். பிரகாசம் தலைமையிலும், கோவிந்தராஜ் முன்னிலையிலும் கடந்த 25ந் தேதி நடைபெற்றது.

பேரவைப் பொதுச் செயலாளர் வை.பெருமாள் பங்கேற்று கழகக் கொடியை ஏற்றுவித்தார். நிகழ்ச்சியில் பேரவை பொருளாளர் கே. ராஜேந்திரன், மற்றும் வெ. மாயன், ஜெயபால், சீனிவாசன், காமாட்சிபெரியசாமி, சிம்சன் புருசோத்தமன் ஆகியோரும் பங்கேற்றனர் உதயகுமார் நன்றி கூறினார்.

சென்னை மாவட்ட

## அண்ணா ரிக்ஷா ஓட்டுநர் சங்க கிளை தொடக்கம்

சென்னை, ஏப். 6— சென்னை மாவட்ட அண்ணா ரிக்ஷா ஓட்டுநர் சங்ககிளைத் திறப்புவிழாவும், கழக கொடி ஏற்று விழாவும் கடந்த 2-ந்தேதி அயன்புரம் பணிமனையில் நடைபெற்றது.

ஏ. காந்தி தலைமையிலும் ஜான், நூரண்லா, கண்ணன முன்னிலையிலும் நாகராசன், கன்னியப்பன் முன்னிலையிலும் நடைபெற்ற இந்த விழாவில் பேரவை பொதுச்செயலாளர் வை. பெருமாள் கலந்துகொண்டு கழகக் கொடி ஏற்றினார்.

வெ. மாயன் பெயர் பலகையை திறந்து வைத்தார். பல கழகத் தோழர்கள் பங்கேற்ற இந்நிகழ்ச்சிக்கு என். குணசேகரன் நன்றி கூறினார்.



## செங்கை மாவட்ட கழக வழக்கறிஞர்கள் கவனத்திற்கு...

10-4-84 செவ்வாய்க்கிழமை மாலை 5 மணி அளவில் பல்லாவரத்தில் செங்கை மாவட்ட கழக அவைத்தலைவர் திரு. பாக்கூர் எஸ். சுப்பிரமணியன் அவர்கள் தலைமையில் ஆலந்தூர் தொகுதி சட்டமன்ற உறுப்பினர் ஹாஜி அப்துல்ரசாக் அவர்கள் முன்னிலையில் கழக வழக்கறிஞர்கள் ஆலோசனைக் கூட்டம் நடைபெறும்.

கழக வழக்கறிஞர்கள் இதனையே அழைப்பாக ஏற்று அனைவரும் தவறாது கலந்து கொள்ளும்படி பணிவுடன் கேட்டுக் கொள்கிறோம்.

இங்ஙனம்

| ஜே.சி.டி.பிரபாகரன் | காஞ்சிபன்னீர்செல்வம் |
|---|---|
| எம். எல். ஏ. செங்கை மாவட்டக் கழக செயலாளர் | செங்கை மாவட்ட மன்ற செயலாளர் |


PUBLISHED BY K. RAVINDRAN ON BEHALF OF THANGAMANI PUBLICATIONS AND PRINTED BY HIM AT ALL INDIA ANNA D.M.K PERARIGNAR ANNA TRUST PRESS AT 34, NELSON MANICKAM ROAD MADRAS-600029

Editor E. PARASURAMAN

# பஞ்சாப் வன்முறைகளை ஒடுக்க ஜனாதிபதி அவசர சட்டம்

## தேசிய பாதுகாப்பு சட்டத்தை திருத்தி ஜனாதிபதி உத்தரவு

**புதுடெல்லி, ஏப். 6- பஞ்சாப் மற்றும் சண்டிகார் யூனியன் பிரதேசத்தில் நடக்கும் கலவரத்தை தடுக்கும் வகையில் தேசிய பாதுகாப்பு சட்டம் திருத்தப்பட்டு கடுமையான அவசர சட்டம் அமுலாக்கப்பட்டுள்ளது. அதற்கான உத்தரவை ஜனாதிபதி ஜைல்சிங் நேற்று பிறப்பித்தார்**

பஞ்சாப் மாநிலத்தில் வன்முறையாளர்கள் கலவரத்தில் ஈடுபட்டு பொது மக்களை துன்புறுத்தி வருகிறார்கள்கொள்ளை, கொலை சம்பவங்கள் ஏற்பட்டு வருகின்றன.

இதை தடுத்து நிறுத்த தேசிய பாதுகாப்புச் சட்டம் திருத்தப்பட்டு கடுமையாக்கப்பட்டுள்ளது. வன்முறையாளர்களையும் நாட்டின் அமைதிக்கு பங்கம் விளைவிக்கும் சமூக விரோதிகளையும் பிடித்து காவலில் வைக்க வகைசெய்யும் அவசரச் சட்டம் பிறப்பிக்கப்பட்டுள்ளது. இதன் மூலம் தற்போதுள்ள தேசிய பாதுகாப்புச்சட்டம்திருத்தப்பட்டுமேலும் கடுமையாக்கப்பட்டுள்ளது.

ஏற்கனவே அமுலில் உள்ள உள்நாட்டு பாதுகாப்புசட்டப்படிநாட்டின் அமைதிக்கு ஊறுவிளைவிக்கும் சமூக விரோதிகளை விசாரணையின்றி 3 மாதகாலம்வரை காவலில் வைக்கலாம்இப்போதைய திருத்தப்பட்ட சட்டப்படி அத்தகைய சமூக விரோதிகளை 6 மாதம் காவல் வைக்கலாம். இதற்காக ஆலோசனைக்குழுவிடம் இருந்து கருத்தை பெறவேண்டிய அவசியம் இல்லை. இப்போதைய அவசரச் சட்டம் இதற்கு வகைசெய்கிறது.

உள்நாட்டு பாதுகாப்புச் சட்டத்திலும் இதற்கான வகைசெய்யப்பட்டுள்ளது. காவலில் வைக்கப்பட்ட ஆசாமிகளை ஆலோசனைக் குழுவின் ஒப்புதல் பேரில் 1 வருட காலம் சிறையில் வைக்கலாம். இந்த சிறைக் காலம் 2 வருடம் என்று உயர்த்தப்பட்டுள்ளது.

### புதிய திருத்தம்

காவலில் வைக்கப்படும் நபர்களுக்கு, அவர் ஏன் காவலில்வைக்கப்பட்டார் என்பதன் காரணம் 5 நாட்களுக்குள் தெரிவிக்கவேண்டும் என்ற விதிமுறை அமுலில் இருந்தது. சில சந்தர்ப்பங்களில் இந்தக் காலவரம்பு 10 நாட்களாகவும் இருக்கலாம். ஆனால் தற்போதையஅவசரச்சட்டத்தின் படி இந்தக் கால வரையறை 15 நாட்களாக திருத்தப்பட்டுள்ளது.

காவலில் வைக்கப்படும் நபர்கள் பற்றிய விவரங்கள் பற்றிய தகவல் அரசுக்கு 15 நாட்களுக்குள் தெரிவிக்க வேண்டும் என்று இருந்ததும் இப்போது 20 நாட்களாக திருத்தப்பட்டுள்ளது.

காவலில் வைக்கப்பட்ட விவரங்கள் ஆலோசனைக்குழுவிற்கு கொடுக்கப்படவேண்டிய காலமும் 3 வாரமாக இருந்தது இப்போது 4 மாதம் மற்றும் 2 வாரமாக (18 வாரம்) அதிகரிக்கப்பட்டுள்ளது. ஆலோசனை குழு தனதுமுடிவான அறிவிப்பை 24 வாரங்களுக்குள் வெளியிடலாம் என்றும் அவசரச் சட்டத்தல் கூறப்பட்டுள்ளது.

தேசியபாதுகாப்புசட்டம் திருத்தப்பட்டதன் நகலை நேற்று நாடாளுமன்றத்தில் மத்திய உள்துறை அமைச்சர் பி. சி சேத்தி தாக்கல் செய்தார். முன்னதாக இது குறித்து மத்திய அமைச்சரவையும் ஆலோசித்து முடிவு செய்தது.

அவசர சட்டம் பற்றிய விவரங்கள் நாடாளுமன்றத்தில் தாக்கல் செய்யப்பட்டபோது எதிர்க்கட்சி உறுப்பினர்கள் எதிர்ப்புத் தெரிவித்தனர்.

அவசரச் சட்டத்தின் மூலம் நாட்டில் அமைதியைப் பாதுகாக்க கடுமையான நடவடிக்கை எடுக்கப்படும் என்றும் மாறுபட்ட கருத்துடைய அரசியல் எதிரிகளுக்கு விரோதமாக இந்தச் சட்டம் பயன்படுத்தப்படமாட்டாது என்றும் அமைச்சர் பி. சி. சேத்தி உறுதி அளித்தார்.

## நிர்வாகிகள் தேர்வு

சென்னை, ஏப். 6- சென்னை மாவட்ட நிலக்கரி அண்ணா பொதுத் தொழிலாளர் சங்கம் பேசின பிரிட்ஜ் அனல் மின் நிலைய நிலககரி பகுதி பொது உறுப்பினர் கூட்டம் கடந்த 28ந்தேதி அண்ணா தொழிற் சங்க பேரவை சென்னை மாவட்டசெயலாளர் வெ. மாயன் தலைமையிலும் பூங்காநகர் பகுதி செயலாளர் ஜெ. குமார் முன்னிலையிலும் நடைபெற்றது. சங்கத்தின் புதிய நிர்வாகிகள் தேர்ந்தெடுக்கப்பட்டனர். சிறப்பு தலைவராக ஜே குமாரும் தலைவராக மகிழன்பனும், துணைத் தலைவர்களாக வெ. முத்தரசனும், சி. ராமகிருஷ்ணனும், பொதுச் செயலாளராக எம் ஜானும், துணைச்செயலாளர்களாக நா. ஜெயராமன், பி. மூர்த்தி ஆகியோரும், பொருளாளராக ஆர். மணியும் மற்றும் செயற்குழு உறுப்பினர்களாக 9 பேர் தேர்ந்தெடுக்கப்பட்டனர்.

## காதணி விழா

சென்னை, ஏப். 6— புரசைதொகுதி 33-வது வட்டம் புரட்சித்தலைவர் பொதுப்பணி மன்ற பொருளாளர் வி. கே. சுப்பிரமணியனின் குழந்தைகளுக்கு 12-ந் தே (வியாழன்) அன்று காலை 7 30 மணிக்கு காதணி விழா நடைபெறஉள்ளது.

இந்த விழாவில் இ. மதுசூதனன், ஜே.சி.டி. பிரபாகரன் எம்.எல்.ஏ., கொ. அ. ஜார்ஜ், ஆ. சேகரன், செ. ஞானப்பிரகாசம், ஜி. வி. ஆனந்தன், என். சீனன் ஆகியோர் கலந்து கொண்டு வாழ்த்துரை வழங்குவார்கள்.







# கோவை ரயில் நிலையத்தில்

# பிரமாண்ட வரவேற்பு

கொங்கு மண்டலத்தின்
கொள்கைத் தங்கங்களே
கழக ஆற்றல் மறவர்களே
கொள்கை பரப்பு செயலாளரை
வ ர வே ற் க

கூட்டம் கூட்டமாக வா!
குடும்பத்தோடு வா!
கழகக் கொடியேந்தி வா!
அலை கடலென
ஆர்த்தெழுந்து வா!

**நாள் 7-4-84** சனிக்கிழமை காலை 5 மணி



ஈன்ற தமிழாய்ந்த சான்றோன்
நம் அண்ணா வழியேற்று
நம் இதய துடிப்பை இயக்கும் அவர்
**இதயக்கனி புகழ் பாடி**
உதயகால உற்சவமாய்
ஊரார் பாராட்ட - உற்ற தமிழ் மொழி காக்க
பாராளுமன்றம் சென்று
உரிமைக்குரல் எழுப்பும்
எங்கள் பகுத்தறிவுப் பாசறையின்
பை ந் த மி ழே
**செல்வி ஜெயலலிதா** எம். பி.
அ வ ர் க ளே

## வருக! வாழ்க!

என வரவேற்கும்
கோவை மாவட்ட அனைத்திந்திய அண்ணா தி. மு. கழகம்
கோவை மாவட்ட புரட்சித்தலைவர் எம். ஜி. ஆர். மன்றம்
கோவை மாவட்ட அண்ணா தொழிற்சங்க பேரவை
மாணவர், மகளிர் பிரிவு அமைப்புகள்

---

கொங்குசீமையாம் கோவை மாநகரில்

நாடாளும் மன்னன் புகழ் பாட பாராளுமன்றம் செல்லும் **செல்வி ஜெயலலிதா** எம். பி. அவர்களுக்கு

# மாபெரும் பாராட்டு விழா பொதுக்கூட்டம்

**இடம்: கோவை சிதம்பரம் பூங்கா நாள்: 7-4-84 சனிக்கிழமை மாலை 6 மணி**

பாராட்டுவோர்

மாண்புமிகு அமைச்சர் பெருமக்கள் - கழக சட்டமன்ற - நாடாளுமன்ற - மேலவை உறுப்பினர்கள், மற்றும் கழக முன்னணியினர்

பாராட்டுக்கு நன்றி தெரிவித்து உரையாற்றுபவர்

கழக கொள்கை பரப்பு செயலாளர் **செல்வி ஜெயலலிதா** எம். பி. அவர்கள்

குறிப்பு: 7 4 84 காலை 5 மணிக்கு கோவை வருகை தரும் செல்வி ஜெயலலிதா எம். பி. அவர்களுக்கு கோவை ரயிலடியில் பிரம்மாண்ட மான வரவேற்பு அளிக்கப்படும். சரியாக மாலை 5 மணி முதல் 6. 30 மணி வரை பலகுரல் மன்னன் சிவகங்கை சேதுராசன் கலை நிகழ்ச்சியும் 6-30 மணி முதல் 8 மணி வரை நவரசம் ஜி. கே. எஸ். அவர்களின் கலை நிகழ்ச்சியும நடைபெறும்.